For 80 years,
we have been providing quality
Buddhist education to adults & children ....

FREE OF CHARGE



Millions have benefitted from the selfless dedication of our Sangha, volunteer teachers & friends of the Vihara obtaining Buddhist education, free publications, counselling, blessings, welfare assistance, etc

**Sasana Abhiwurdhi Wardhana Society**
佛陀教义弘扬协会

Buddhist Maha Vihara
123, Jalan Berhala, Brickfields,
50470 Kuala Lumpur, Malaysia

# Publication of the




## Sasana Abhiwurdhi Wardhana Society
佛陀教义弘扬协会



Buddhist Maha Vihara,
123, Jalan Berhala, Brickfields,
50470 Kuala Lumpur, Malaysia
Tel: 603-22741141 Fax: 603-22732570
E-Mail: info@buddhistmahavihara.com
Website: www.buddhistmahavihara.com
www.ksridhammananda.com





The Sasana Abhiwurdhi Wardhana Society gratefully acknowledges the efforts of Mr. E.Anban of the Buddha Light International Association, Chennai Chapter for translating the original English text to Tamil.

August 2010 – 2,500 copies

**Printed by Uniprints Marketing Sdn. Bhd.** (493024-K)
*(A member of Multimedia Printing & Graphics (M) Sdn Bhd)*

ISBN: 978-983-3896-07-3

# பவுத்தம் நான் பிறந்த பூர்வீக சமயம்

**(Buddhism my religion of Birth)**

**(by Premaseri)**

தமிழாக்கம் - அன்புமலர்

## பவுத்தம் - நான் பிறந்த பூர்வீக சமயம்

மதம் அல்லது சமயம் மானுட உலகில் இன்றுவரை ஒரு வலி தீர்க்கும் நிவாரணியாகவே விளங்கி வருகிறது. மதம் என்ற சொல்லும் ஒரு குறிப்பிட்ட அல்லது நிர்ணயிக்கப்பட்ட பொருளுடைய சொல் அல்ல. காலத்துக்கு காலம் மக்களின் அச்சத்தின் காரணமாக அவர்களின் மன நிலையை பொருத்து மாறிக் கொண்டே வந்துள்ளது.

மின்னல், மழை, வெள்ளம் ஏற்பட்ட போதெல்லாம் தொடக்கக் கால மனிதர்களுக்கு அச்சம் ஏற்பட்டது. அவைகள் இயற்கையின் பருவ மாற்ற செயல்பாடு என்பதை அறியாதிருந்தனர். மனித சக்திக்கு அப்பாற்பட்டு மந்திர தந்திர சக்திகளாக உணரப்பட்டது. மதத்தின் பரிணாம வளர்ச்சியில் மந்திர சக்திகளின் சீற்றத்தை தணிவிப்பதற்காக சடங்குகள், பிரார்த்தனைகள், பலி, யாகங்கள் நடத்தப்பட்டு மத நம்பிக்கையாக கருதப்பட்டது. தொடக்கக் காலத்தில் மனிதனால் விளங்கிக் கொள்ள முடியாது தவித்த மின்னல், மழை, வெள்ளம் போன்ற பெரும் சக்திக்கு அச்சம் காரணமாக மதம் தோன்றியது. அப்பெரும் சக்தியே தெய்வம், கடவுள் மற்றும் படைத்தவன் என்றும் கருதப்பட்டது.

எனவே, உலகம் முழுவதும் சமயத்தின் விளைவுக்கு காரணம் அச்சமே. மக்கள் சூரியனை, சந்திரனை, நெருப்பை, மலையை, மரங்களை கடவுளாக நம்பினார்கள். சமய சடங்குகள், வழிபாடுகள் பலியிடல் மூலம் காலம் காலமாக சமய மரபுகள் உருவாகி இன்று பலவகையான சமய குழுக்கள் அதிகரித்துவிட்டது. ஒரு சமய குழுக்களின் நம்பிக்கைகளை பிற குழுக்கள் செய்திட தடை விதித்தது. ஏற்றத்தாழ்வுகள் சமய வேறுபாடுகளால் மக்களிடையே முரண்பாடுகள்,

பகைமை எண்ணங்களும் அதிகரித்ததால் ஒரு குறிப்பிட்ட சமய நம்பிக்கையாளர்கள் கடவுளிடம் நேரடி தொடர்பாளர்களாக தங்களை முன்னிலைப்படுத்திக் கொண்டனர். உயிர் பலியிடல், உண்ணா நோன்பு, தன்னைத் தானே வறுத்திக் கொள்ளும் சடங்குகள், கோப கடவுள்களை சமாதானப்படுத்தும் வழக்கம் அதிகரித்தது.

சமய குழுக்கள் அதிகரித்து ஒருவரின் நம்பிக்கை பிறரின் நம்பிக்கைகளை தாழ்வாக நோக்கிட்டனர். ஒரே சமயத்தில் சிறு சிறு குழுக்கள் உருவாகி முரண்பாடுகள் அதிகரிக்கத் துவங்கி, சகிப்புத்தன்மையற்ற சூழல் அதிகரித்து விட்டது.

இந்த சூழ்நிலையில் நான் (ஆசிரியர்) குறிப்பிட விரும்புவது சமயங்களுக்கு எதிரானவன் அல்ல. ஆயினும் சில சமய நம்பிக்கையாளர்கள் தங்கள் சமயத்தை பரப்பிட பிற சமயங்களை குறைகூறி நம்பிக்கைகளை குற்றம் கற்பித்து வருகின்றனர். இதனால் ஒருவருக்கு ஒருவர் சமய வேறுபாடுகள் அதிகரித்து சமய சண்டை-களுக்கும் காரணமாகிவிட்டனர். ஆயின் உண்மையாக எல்லா சமயமும், இரக்கத்தை, சகிப்புத்தன்மையை, மன்னிப்பை போதிக்கும் கடவுள்களாக திகழ்ந்து உள்ளனர். கிழக்கு நாடுகளின் சமயமும், நம்பிக்கைகளும் மேற்கு நாடுகளால் ஏற்க முடியாமல் நசுக்கப்பட்டது.

## சமய முரண்பாடுகள்:

இருபதாம் நூற்றாண்டில், கிழக்கு நாடுகளில் மேற்கு நாட்டு ஆதிக்கம் அதிகரித்தது. இந்து, பவுத்த சமயங்கள் சிறிது சிறிதாக தேய்ந்து மேற்கத்திய சமய நாடுகளின் முரண்பட்ட உண்மை சமயங்கள் ஆதிக்கம் செலுத்தத் துவங்கியதால்

புதுமை சமய சுதந்திர சிந்தனைகள் முழு மூச்சுடன் செயல்படத் துவங்கியது. மிஷினரிகளின் திட்டமிட்ட சமய பரப்பு பணிகள் வேகமாக திணிக்கப்பட்டு, சமய நற்பணிகள் மூலம் மக்களை கவர்ச்சியடையச் செய்தது. குறிப்பாக, இந்து, பவுத்த சிந்தனைகளின் சிறு குறைபாடுகள் மேற்கு சமயத்தினரின் செயல்பாடுகள் அதிகரித்தது, ஆயின் மேற்கத்திய நாடுகளின் நிலைமை இதற்கு நேர்மாறாக இருந்தது. கிழக்கு சமயங்களான இந்து மதமும், பவுத்த மதமும் மேற்கில் வளமான சமயமாகிவிட்டது. குறிப்பாக பவுத்த சமயம் அறிவாளிகளின், கல்வியாளர்களின், நேர்மையாளர் -களின் சமயமாக மாறிவிட்டது.

### ஆபிரகாம் மாஸ்லோவின் பிரமிட் படிநிலை அத்தியாவசியத் தேவைகள்

உயர்ந்த தேவைகள்




ஆபிரகாம் மாஸ்லோவின் மாதிரி படிநிலை தேவைகளை பிரமிட் மாதிரி விளக்கம் உயர்ந்த தத்துவ விளக்கமாக மேற்கு நாடுகளில்

கருதப்பட்டது. நாமும் அதன் விளக்கத்தை ஒவ்வொரு படிநிலைகளிலிருந்தும் துல்லியமாக நமது சுய அறிவினால் புரிந்துக் கொள்ள இயலும். ஒவ்வொரு தனி மனிதருக்கும் இவ்வகை படிநிலை முன்னேற்றம் தமது வாழ்வில் பெற வேண்டுமென்ற எண்ணமும், உறுதிப்பாடும் நிச்சயமாக இருக்கும்.

கல்வியில் பொருளாதாரத்தில் உயர்ந்த மேற்கத்திய நாட்டினருக்கு மாஸ்லோவின் பிரமிட் படிநிலை தத்துவம் மிகவும் சரியாகப்பட்டது. எனவே, மேற்கத்திய நாட்டினர் அழுத்தமான அடிப்படை கோட்பாடுகளுக்கு ஆழமான சிந்தனைகளை செலுத்தத் தொடங்கினார்கள்.

மாறாக, கிழக்கு நாட்டில் மிக மிக அவசிய தேவையான உணவு, உறைவிடங்களை தேடி அலைந்தவர்களை மிஷனரிகள் நெருங்கி உணவும், உறைவிடமும் வழங்கினார்கள். பசியின் கொடுமை தாங்க இயலாத கிழக்கு நாட்டினர்கள் மேற்கத்திய மிஷினரிகளின் அடிமைகளானார்கள்.

## கிழக்கு நாட்டினர் நிலை:

சமயங்களின் பெயரால் ஏழை மக்களை ஏமாற்றி அத்தியாவசிய பொருள்களை வழங்குவதாக கூறி தமது சமயத்தை பணத்தால் அடிமைப்படுத்திய உலகின் பணக்கார நாடுகளின் இரண்டு உதாரணங்களை நோக்குவோம்.

ஒரு ஏழை கிழக்கு நாட்டை சார்ந்த விவசாயி தனது குடும்பத்திற்கு தேவையான அடிப்படை தேவைக஌ள பூர்த்தி செய்வதில் மிகவும் அக்கறை காட்டும் குணமுடையவர். அவரின் அன்றாட தேவைகளை தவிர்த்து எதிர்காலம் குறித்தான சிந்தனை இல்லாதவர். அவரின் அன்றாட உணவு, உடை, உறைவிட தேவைகளுக்கே போராட வேண்டியவர். இந்த

துன்ப மயமான வாழ்வில் தனது விளைநிலங்களுக்கு தினமும் அரசின் மானியம் கிடைக்குமா? வங்கியின் உதவி கிடைக்குமா? தனது பிள்ளைகளின் கல்விக்கு கடன் யாரேனும் உதவி செய்வார்களா? போன்ற மன உளைச்சலில் இருப்பவர்.

புதிதாக பள்ளியிலிருந்து கல்லூரி படிப்புக்கு செல்லும் ஒரு கிழக்கு நாட்டு இளம்பெண்ணை இரண்டாம் உதாரணமாக எடுத்துக் கொள்வோம். தனது பெற்றோரை விட்டு இதுவரை பிரிந்து வாழ்ந்திருக்க மாட்டாள்; புதியதாக கல்லூரியில் சேர்ந்திருக்கும் மற்றொரு பெண்ணின் அறையில் பங்கெடுக்கும் புதிய அனுபவம், கல்லூரியில் பாடங்களை கவனிக்க வேண்டியும், குழுக்களாக படிக்கும் புதிய அனுபவம்; மூத்த மாணவிகளின் குறிப்பேடுகளை தேடும் கட்டாயம், வார விடுமுறை நாட்களில் புதிய சில கடமை உணர்வுகள்; கல்லூரி ஆசிரியர்கள் வழங்கும் பொறுப்பான பாடத்திட்ட கடமைகள் போன்று பட்டியல் நீண்டுக் கொண்டே போகும்.

மேற்கண்ட இரண்டு உதாரணங்களில் விவசாயியின் கடமைகளில் ஒரு மேற்கத்திய மிஷினரி மிகவும் வெற்றியுடையவராகிறார். கிராமங்களுக்கு சென்று ஏழை விவசாயிகள், ஆதரவற்றவர்களை அணுகி அவர்களின் அன்றாட தேவைகளுக்கு உதவுகிறார்கள். சில மிஷினரிகள் அவர்கள் பகுதியிலேயே நிரந்தர தங்குமிடங்களை உருவாக்கி தமது சமயத்தையும் பரப்பி விடுகிறார்கள். ஒரு மாணவர் கல்விக்கு உதவுதல் மூலம் படிப்படியாக படித்த பின்னர் தங்களின் பாதுகாப்பில் வைத்து நன்றிக்கடன் படச்செய்து தமது சமயத்தை அவர்களுக்கு மாற்றம் செய்தும் விடுகிறார்கள். மாணவர் சில ஆண்டுகளுக்கு பிறகு

தமது பெற்றோரையும விலகி தொடர்ந்து மிஷினரிகளின் சமய நம்பிக்கை சார்ந்து வாழத் தொடங்குகிறார்கள்.

ஒரு பழமொழி நினைவுக்கு வருகிறது.

"மிஷினரிகள் இந்நாட்டுக்கு வரும்போது அவர்கள் கரங்களில் ஒரு புத்தகம் வைத்திருந்தனர். அதை நம்மிடம் கொடுத்து நம்மை ஜெபிக்கச் சொன்னார்கள். நாமும் கண்களை மூடி ஜெபித்தோம். கண்களை திறந்தபோது நம்மிடம் அவர்களின் புத்தகம், அவர்களிடம் நமது நிலமும் இருந்தது".

கல்லூரியில் சேர்ந்த புதிய மாணவியின் தேவைகளான உற்ற நண்பர் அல்லது வழிகாட்டியாக மிஷினரிகளின் குழுவினர் வெற்றிகரமாக நண்பராக, வழிகாட்டியாக அமைந்தனர். அவர்கள் இப்பணிகளில் மிகவும் கடமை உணர்வுடன் செய்திட பயிற்சி பெற்றிருந்தனர். குறிப்பாக, கிராமங்களிலிருந்து தனியாக கல்லூரிகளுக்குள் சேரும் மாணவர்களை அடிக்கடி சந்தித்து அவர்களுக்கு தேவையான-வற்றை உதவியும், ஜெபித்தும் தங்கள் சமயத்திற்கும், ஆலயங்களுக்கும் குடும்பத்தோடு ஈர்த்து சென்றனர். இதுதான் உண்மை.

இதேபோன்ற கல்லூரியில் மூன்றாம் ஆண்டு பயின்று வந்த மாணவி, சில நேரங்களில் மட்டுமே நிகழ்வுகளில் பங்கேற்கும் ஒரு மாணவி, பவுத்த சமய வகுப்புகளிலும் தொடர்புடைய-வரையும், மிஷினரிகளில் அணுகினார்கள். சோதனை இந்த மாணவியையும் விடவில்லை. ஒருநாள் அதிகாலை 5 மணிக்கு கல்லூரி விடுதி தீப்பிடித்து தீ வேகமாக பரவியது. இவரின் அறையும், பொருட்களும் தீக்கிறையாயின. சோகம், துக்கம் தாங்க முடியவில்லை. சில முக்கிய

சான்றிதழ்கள் தீயில் தீய்ந்துவிட்டது. சோகத்தில் ஆறுதலாக எவரும் கிடைக்க மாட்டார்களா? ஏக்கத்தோடு கதறினாள். அவரின் பவுத்த சமய நண்பர்கள் ஆறுதலாக பேசிச் சென்றுவிட்டார்கள். ஆனால், மிஷினரி நட்புடைய விடுதி மாணவிகள் அவளின் துக்கத்திற்கு ஜெபித்தார்கள். அடுத்த இரண்டு ஆண்டுகளுக்கு நெருங்கிய நண்பர்களாகவும் விளங்கினார்கள். தாம் ஏற்கெனவே அறிந்த புத்த தம்ம சமய பணியாளர்களின் தொடர்பு முற்றிலும் விலகியே வாழும் சூழ்நிலை. இரண்டு ஆண்டு மேற்படிப்புக்கு பிறகு இவர் தமது பவுத்த தம்ம குழுக்களில் மீண்டும் இணைந்தார். தமது துக்ககரமான சூழலில் ஆறுதலை மிஷினரி நண்பர்கள் வழங்கினாலும், தமது முதிர்ந்த அறிவாற்றலால் மீண்டும் பவுத்த சமயப் பற்றாளராகத் தொடங்கினார். ஆபிரகாம் மேஸ்லோவின் பிரமீட் சூத்திரத்தின்படி மாணவி சுய முன்னேற்ற படிநிலையில் தம்மைத் தாமே முன்னேற்ற பாதைக்கு செல்கிறார் என்பதே உண்மை.

கிழக்கு நாடுகளில் வாழும் பவுத்த சமய பரப்புனர்கள் மிஷினரிகள் போல முழுநேர சமயப் பரப்புனர்கள் அல்லர். அவர்களுக்கு பணக்கார நாடுகளின் பொருளாதார உதவியும் கிடைப்பதில்லை. உபாசகர்களும், பவுத்த பிக்குகளும் தன்னார்வ தொண்டர்களே. குறைந்தபட்சம் தங்களின் பவுத்த சமய பணிகளுக்கு செல்ல பயணச் செலவும் இல்லாதவர்கள். சில பேச்சாளர்களை தமது சிறு சேமிப்புகள் வழங்கி வரவழைத்து தம்ம உரையாற்ற செல்கிறார்கள். எந்த கல்வி நிலையங்களும், விகாரைகளும், சமய கல்வியை பயிற்சி செய்வதில்லை. பவுத்தமும் ஒரு தனி மனித ஒழுக்கத்தையே முன்னிருத்துகிறது. குழு ஆலோசனைகள் தனி மனித ஒழுக்கத்தையே

முன்னிருத்துகிறது. குழு ஆலோசனைகள் விகாரைகளில் மட்டுமே, சமய தொடர்புகளை உருவாக்கும் ஊடகங்கள் இல்லை. மிஷினரிகள் போல இளைஞர்களுக்கான பயிற்சி நிலையங்கள் இல்லை.

கிழக்கு நாடுகளின் பவுத்த, இந்து சமயத்தினர் பொருளாதார வளர்ச்சிக்கு எவ்வித திட்டமும் இல்லை. அதற்கேற்ப ஏழை மக்களை மிஷினரிகள் தேர்ந்தெடுத்து தங்கள் பக்கம் ஈர்த்துச் சென்றுவிட்டனர். கடந்த அறுபது ஆண்டுகளாக ஒரு சில கல்வி கற்ற பவுத்த பிக்குகள் தாய்வான், இலங்கை, தாய்லாந்து, மியான்மர் போன்ற நாடுகளிலிருந்து மலேசியா, சிங்கப்பூர், இந்தியாவில் சில பகுதிகளில் குடிபெயர்ந்து பவுத்த சமயத்தை, குறிப்பாக சீனமொழி மக்களிடம் பவுத்த தம்மதத்தை பரப்பச் செய்தனர். மிக சிறிய பவுத்த பரப்புனர்கள் மிக அதிகமான உபாசகர்களை தொடர்ந்து ஈர்க்க முடிந்தது. ஆயினும் இன்றும் சில பவுத்த சமய ஏற்பாளர்களில் சந்ததியினரும் புத்தரின் போதனைகளை அறியாதவர்களாக விளங்குகிறார்கள்.

## மேற்கு நோக்கி:

கிழக்கு நாடுகளிலிருந்து மேற்கில் குடியேறியதால் தொடர்ந்து நிலையாக வாழும் நோக்கத்துடன் குடியமர்ந்தனர். அத்துடன் தமது வாழும் பண்பாடு, சமய, கலாச்சாரங்களையும் பாதுகாத்திட சமய அறிஞர்களின் ஆலோசனை பெற்றார்கள். உதாரணமாக சீன நாடு தனிமைப்படுத்திய திபெத் நாட்டினர் தங்களுடன் பல பவுத்த பிக்குகளை மேற்கு நாடுகளுக்கு அழைத்துச் சென்றனர். படிப்படியாக கிழக்கு நாட்டு பவுத்த சமயம் மெதுவாக வளர்ச்சியுற்றது. மேற்கு நாட்டு அறிஞர்கள் பவுத்த சமய

போதனைகளை உணரத் தொடங்கி, ஒரு நிலையான வெற்றிக்கு வழிவகுத்தது. மேற்கத்திய மக்களின் பல்வகையான சந்தேகங்களுக்கு விடையளிக்க முடிந்தது. குறிப்பாக மேற்கத்திய சமய புலமையாளர்களின் அறிவியல்பூர்வ சந்தேகங்களுக்கும், புத்தரின் போதனைகள் விடையளிப்பதாக விளங்கியது. குறிப்பாக டார்வின் பரிணாம வளர்ச்சி தத்துவம், பூமியை சுற்றிவரும் சூரியன் போன்ற விளக்கங்கள் மேற்கு நாட்டு கடவுள் ஏற்பாளர்கள் கூறிய பூமி கடவுளால் படைக்கப்பட்டதான கொள்கை பொய்யானது.

மேற்கத்திய நாடுகள் பொருளாதார முன்னேற்றம் அடைந்து, ஆபிரகாம் மேஸ்லோவின் பிரமிட் தத்துவ விளக்கத்தின் உச்சகட்ட சுய முன்னேற்றம் அல்லது தன் முயற்சியில் மக்கள் உயர்ந்திருந்தனர். ஆயின், ஆன்மீகத் தேவை வெற்றிடமாக விளங்கியது. தங்களின் ஆன்மீக வெற்றிடத்தை பூர்த்தி செய்யாத சமயத்தை தொடர தயாராக இல்லை. எனவே, கடவுளர் சமயங்களை தவிர்த்தார்கள். இவைகள் கடவுள் அல்ல, சாத்தான் அல்லது தீயவைகளாக நம்பி ஒதுங்கினார்கள்.

மேற்கத்திய நாடுகளின் போற்றுதலுக்குரிய அறிவியல் ஞானி, தத்துவ அறிஞரும், எழுத்தாளருமான ஆல்பர்ட் ஈன்ஸ்டீன், பேராசிரியர் ரைஸ்டேவிஸ் மற்றும் H.G. வெல்ஸ் ஆகியோர் பவுத்த சமய கோட்பாட்டை கற்றுத் தெளிந்ததுடன் அதனை அறிவியல் பூர்வமானதாக அறிவித்தார்கள். அமைதிக்கான நோபல் பரிசு பெற்ற அறவனடிகள் தலாய்லாமாவின் பவுத்த தம்ம உரைகளும், புத்தகங்களும் மேற்கத்திய நாடுகளில் பவுத்த சமய ஏற்புடையவர்களை அதிகரிக்கச் செய்தது. அறவனடிகள் தலாய்லாமாவின் இரக்கம், அன்பு, கருணை·

யுடனான அணுகுமுறையும், குழப்பங்களை தீர்க்கவும், பகைமை குறைத்து சமாதானத்தை மக்களிடையே வலியுறுத்தியமையும் பவுத்தத்திற்கு வெகுமக்களை ஈர்க்கச் செய்தது. சகிப்புத்தன்மை, புரிதல் ஆகியவையே சமாதானத்திற்கான பவுத்த வழிமுறையாக போதிக்கப்பட்டது.

"இயற்கை சீற்றங்களால் மனிதர்கள் பேரழிவுகளுக்கு உட்படுத்தப்பட்டாலும், தனது அறிவுக்கூர்மையால் மனிதனே உயர்வானவன், பவுத்த சமய போதனையைப் போல உண்மை புரிதலால், அறிவுக்கூர்மையால் இயற்கை பேரழிவுகளை மனிதனால் கட்டுப்படுத்த இயலும். அதேபோல் இயற்கை பேரழிவுகளை திசை திருப்பவும், பேரழிவுகளை வெல்ல மனிதன் மாபெரும் சக்தி படைத்தவன்" - அறிஞர் பாஸ்கல்.

"எதிர்கால சமயமென்பது கடவுள், மூடநம்பிக்கை, சமய சடங்குகளுக்கு அப்பாற்பட்ட பேரண்டவெளி சமயமாகும். இயற்கை - ஆன்மீகம் இணைந்த சமயமாகும். அதன் அடிப்படை அனுபவத்தையும், ஆன்மீகத்தையும், இயற்கையை-யும் சார்ந்த அர்த்தமுள்ள இணைப்பை மகிழ்ச்சிக்கும், சமாதானத்திற்கும், வழிகோலும் பவுத்த சமய கோட்பாடே" - ஆல்பர்ட் ஈன்ஸ்டீன்.

"கவுதம புத்தரின் நிரந்தரமற்ற தத்துவம் மிகப் பெரும் உளவியல் அறிஞர்களின் காலம் காலமாக நம்பி வரும் நிரந்தர கொள்கையிலிருந்து தத்துவத்துறை மாணவர்களை விலக்கி ஈர்க்கச் செய்தது. புத்தரின் உயர் ஞான தத்துவம், மூடநம்பிக்கை சமயத்திலிருக்கும் கடவுள் ஒன்றே என்ற நம்பிக்கையிலிருந்தும் விலக்கி வியக்கும் உலகின் பரிணாம வளர்ச்சி தத்துவத்தை ஏற்கக்கூடிய புதிய சிந்தனையை வளர்த்தது"

பேரா.ஹெக்ஸ்லி, பரிணாம வளர்ச்சியும், நீதிநெறியும்.

பவுத்த கொள்கைகளை அழிக்கும் நோக்குடன் முதலில் பவுத்த அடிப்படை கொள்கைகளை கற்கத் தொடங்கிய பலர் வியப்புக்குரிய வகையில் பவுத்த தம்மத்தை ஏற்கச் செய்தது, அறவனடிகள் அனோமா மகிந்தர் அவர்களின் "மகிழ்ச்சியின் வரைபடம்" என்ற நூலில் எழுதுகிறார்:

பாலி இலக்கியங்களை ஆங்கில மொழியில் மொழி பெயர்த்த முதல் கல்வியாளர் ஒரு கிறித்துவ சமய குருவின் மகன் ஆவார். அவர் புத்தரின் கொள்கைகள் கிறித்துவ சமய கொள்கைக்கு ஈடிணையற்றது என்பதை நிரூபிக்க முயன்றார். ஆயின் தனது முயற்சியில் அவர் தோல்வியுற்றாலும், பவுத்த மொழி மாற்றத்தினூடே அவரும் பவுத்த சமயத்தை ஏற்றார். அத்துடன் அவரின் மொழிப்பெயர்ப்பும், எழுத்துக்களும், மேற்கத்தினிரிடையே பெரும் வரவேற்பை பெற்று, பிற்காலத்தில் மிகப்பெரிய பவுத்தராக போற்றப்பட்டார். அவர்தான் பேரறிஞர் டாக்டர் ரைஸ் டேவிட்.

## பிடிவாதமில்லாத:

நாகரீகமான வளர்ச்சியும், வலிமையான மக்கள் சக்தியுடைய மேற்கத்திய சமயம் நம்பிக்கையற்ற குழப்பத்தை உருவாக்கச் செய்தது. அறிவியல் அறிஞர்கள், தத்துவ ஞானிகள் மற்றும் உளவியல் அறிஞர்களால் மறுதலிக்கும் சமயமாக மாறத் தொடங்கியது.

பிரபல இத்தாலிய நாட்டு வானியல் அறிஞர் கலிலியோ, பூமி சூரியனை சுற்றி வருகிறது என்பதை ஆக்கப்பூர்வமாக கண்டறிந்தார். சமய

மூட நம்பிக்கையாளர்களின் விசாரணைக்குட்படுத்தப்பட்ட கலிலியோ தம் கண்டுபிடிப்பை வாபஸ் பெற அச்சுறுத்தி தண்டிக்கப்பட்டார்.

விஞ்ஞானி சார்லஸ் டார்வின் கடவுள் உலகைப் படைத்தார் என்ற தத்துவத்தை அறிவியல்பூர்வமாக மறுத்தார். அவரும், அவரின் தத்துவமும் கேலியும், கிண்டலும் செய்யப்பட்டதுடன், கேலி சித்திரங்களால் பரிணாம வளர்ச்சி தத்துவம் மதவாதிகளால் கண்டிக்கப்பட்டது.

மதவாதிகளின் எதிர்ப்பு நாளடைவில் தோல்வியுற்றது. அறிஞர்கள், உலகம் பல்லாயிரம் ஆண்டுகளாக இயற்கையின் மாற்றங்கள் அடைந்தது, புனித நூலில் உலகை ஏழு நாட்களில் கடவுள் உருவாக்கினார் என்ற செய்தி பொய்யாக்கப்பட்டது. புவியியல், உயிரியல், உடலியல் அறிஞர்களும் பூமியின் பரிணாம வளர்ச்சி மாற்றங்கள் பல்லாயிரம் ஆண்டுகளாக உயிரினங்கள் மாறிக்கொண்டே வருகிறது என்பதை நிரூபித்து கடவுள் படைப்பெனக் கூறும் வாதத்தை பொய்யாக்கினர்.

பெட்ரண்ட் ரஸ்ஸல் கூறினார்: "புத்தரை நான் பெரிதும் மதிக்கிறேன். காரணம், புத்தர் பிழையான கோட்பாடுகளை மறுத்ததுடன் பிரபஞ்சம் எவ்வாறு உருவானது என்ற மதவாதிகளின் கூற்றை ஏற்கவில்லை".

1998-ஆம் ஆண்டில், போப் ஜான் பால் II பிரபஞ்சம் கடவுளால் படைக்கப்படவில்லை மாறாக, பிரபஞ்சத்தின் தோற்றம் காலம் காலமாக இயற்கையின் பரிணாம வளர்ச்சியே என்று பிரகடனப்படுத்தினார். புனித நூல்களை நம்பி வந்த மதவாதிகளுக்கு இந்த பிரகடனம் மிகப்பெரிய பின்னடைவை ஏற்படுத்தியது.

பவுத்தம், நேரடியான உண்மையை, நம்பகமான கோட்பாட்டை போதித்தது. வாழ்க்கையில் மனமும், உடலும் ஒன்றையொன்று சார்புடையதாயிருக்கிறது. மனம், உணர்ச்சி, சிந்தனைகளின் தாக்கத்தால் செயல்படுகிறது என்று போதித்தது.

மனித உடல் திடப்பொருள், திரவப்பொருள், உஷ்ண மற்றும் இயங்கும் கூட்டுப் பொருள்களால் அடங்கியதாக விளங்குகிறது. அனைத்தும் நிலையற்ற பொருள்களாக பவுத்தம் போதிக்கிறது. இன்றைய கணிதவியல் அறிஞர்கள் இதையே தொடக்கமில்லாததாக அல்லது பூஜ்யமாக விளங்கிக் கொள்கின்றனர். பவுத்தர்கள் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப வளர்ச்சியை கண்டு அச்சமுறக்கூடாது. காரணம், புத்தரின் போதனைகள் இயற்கையாக அறிவியலாகும். "உள்ளதை உள்ளவாறு" புரிந்துக் கொள்ளுதலை புத்தர் பல நூற்றாண்டுகளுக்கு முன்னரே தெளிவாக போதித்தார்.

## <u>விடுதலை சிந்தனை சுதந்திரம்:</u>

பவுத்தம் விடுதலை மற்றும் சிந்தனை சுதந்திரத்தை பெரிதும் போதிக்கிறது. ஒரு சில சமயங்கள் பிற சமய வழிபாட்டு ஸ்தலங்களுக்கு செல்வதை, பிற சமய நூல்களை படிப்பதையும், பிற சமய சொற்பொழிவுகளையும் அறிய அனுமதிப்பதில்லை. அவ்வாறு எவரேனும் செய்தால் அச்செயல் பாவமாக கருதப்பட்டு, பின்னர் அவர்கள் நரகத்தில் தள்ளப்படுவார்களென்றும் அச்சுறுத்தப்படுகிறார்கள். இவ்வாறு சிலர் பிற சமயங்களின்மீது ஒருவகை வெறுப்பை விதைத்து மக்களை குருட்டு நம்பிக்கைக்கும், அறியாமைக்கும் தள்ளப்படுகிறார்கள்.

ஆயின் பவுத்தம் அறியாமையை அகற்றி, வாழ்வின் இயற்கைப் பற்றிய வரைமுறையை அளிக்கிறது. பவுத்த மத கடவுள் மீது அச்சம், கீழ்படிதல், சார்ந்திருத்தல் ஆகியவற்றிலிருந்து விலக்கி நிறைவான இன்பத்தை, விடுதலையை, சுய முயற்சியால் மனத்தை தூய்மைப்படுத்தி வாழ்வை நிறைவாக்குகிறது. மரபு ரீதியானது, சமய நூல்களில் உள்ளன என்பதற்காக ஏற்கப்படக்கூடாது. அதேபோல் பிற சமயங்களின் கருத்துக்களில் உண்மைகளை நிராகரிக்கவும் புத்தர் போதிக்கவில்லை.

ஒருமுறை உபாலி என்ற செல்வந்தர், புத்தரை அணுகி தனது சமயம் மிகவும் உயர்ந்ததாகவும், பிற சமயங்களின் போதனைகள் தவறானவை என்பதை தர்க்கரீதியாக விளக்க புத்தரை சந்திக்க வந்தார். விவாதத்தின் இறுதியில் புத்தரின் போதனையே சிறந்தது என்று ஒப்புக் கொண்டு, அவரே பவுத்த சமயத்தை தழுவினார். ஆயினும் உபாலிக்கு கீழ்வரும் உபதேசத்தை வழங்கினார்.

"ஓ... இல்லறத்தாரே! அறிவுடையோர் தங்கத்தை சுட்டும், வெட்டியும், உறைத்தும் பரிசோதித்து பார்த்து ஏற்பது போலவே நீங்களும் என் சொற்களை நன்கு ஆராய்ந்து பின்னரே ஏற்க வேண்டும். என் மீது உள்ள மதிப்பால் ஏற்றுவிடக்கூடாது" என்று.

உபாலி புத்தரின் உரையை கேள்வியுற்றதும், "மேன்மைமிகு புத்தரே, தங்களின் போதனை திறந்த தத்துவமாய் உள்ளது. எண்ணற்ற கேள்விகளுக்கு தங்களின் தம்மம் பதிலாக அமைந்துள்ளது. நான் ஊர் ஊராய்ச் செல்வேன். நகர் நகராகச் செல்வேன். புத்தரையும், தம்மத்தையும் புகழ்ந்தவரே, போதனையில் மிகச் சிறந்த ஒன்று அஃதே".

"புத்த, தம்ம, சங்கத்தை வணங்கி ஏற்கிறேன்" என்று தொடர்ந்து கூறி பவுத்தத்தை தழுவினார்.

ஆளவாக சத்தம் எனும் மிகப் பிரசித்திப் பெற்ற தம்ம நூலில்:

- மரபுரீதியானது என்பதற்காக எதையும் ஏற்காதீர்கள்.
- சமய நூல்களில் உள்ளன என்பதற்காகவும், எதையும் ஏற்காதீர்கள்.
- சமய போதகரின் கருத்து என்பதற்காக எதையும் ஏற்காதீர்கள்.
- பெரும்பான்மையினரின் கருத்து என்பதற்காகவும், எதையும் ஏற்காதீர்கள்.
- மதிப்பிற்குரிய போதகர்களால் போதிக்கப்பட்டது என்பதற்காகவும் எதையும் ஏற்காதீர்கள்.

ஆனால் விமர்சன ரீதியில் ஆராயப்பட்டும், சரியாக பரிசீலிக்கப்பட்டும் மட்டுமே எதையும் ஏற்கப்பட வேண்டும் என்று புத்தர் விளக்குகிறார்.

ஒருவர் எந்த தவறையும் இழைக்கவில்லை. எந்த இகழ்ச்சிக்கும் ஆட்படவில்லை என்று அறிவது ஒரு பெரும் சுதந்திரமும், மகிழ்ச்சியுமாகும். பிறப்பு, இறப்பு எனும் சுழற்சியில் இல்லறத்தாரை நேரிய வழியில் பொருளீட்டவும், பாதுகாக்கவும், பகிர்ந்துக் கொள்ளவும் பவுத்தம் ஊக்கமளிக்கிறது.

## வேற்றுமையில் ஒற்றுமை:

முற்கால சமயப் பரப்புனர்களின் செயல்பாடுகளை நோக்கும்போது நாம் மிகவும் அதிர்ச்சியடைகிறோம். அவர் எல்லா சமயங்-

களையும் மூடத்தனமானதாக, வெறும் கற்சிலைகளாக, அவற்றை வழிபடுபவர்கள் பிசாசுகள் என்றும், அவர்களை மூடத்தனத்தி-லிருந்து விடுதலை செய்யவே தாங்கள் வருகைப் புரிந்திருப்பதாகவும் இறைதூதுவர்களாக தங்களை அறிமுகப்படுத்தி, தங்கள் சமயத்தை ஊடுறுவச் செய்தனர். அவர்கள் நாட்டு அரசுகளின் உதவியுடன் சமயத்தை நிறுவினார்கள். தங்களின் சமயத்தை தழுவ மறுத்தவர்களை மிகவும் கடுமையாக விமரிசிப்பதும், துன்பத்திற்கும் உட்படுத்தப்பட்டார்கள். அவர்கள் சமயத்தை மறுத்தவர்களை படுகொலை செய்தனர். சமய வழிபாட்டு தலங்கள் இடித்து தரைமட்டமாக்கப்-பட்டது. மேற்கத்திய ஆட்சியாளர்களின் வற்புறுத்தலினால் பலர் மேற்கத்திய சமயத்தை அச்சத்தின் காரணமாக தழுவ நேரிட்டது. 2550 ஆண்டுகளுக்கு முன்னர் குறிப்பாக புத்தர் வாழ்ந்த காலத்தில் இந்தியாவில் சுமார் 62 பலதரப்பட்ட சமய நம்பிக்கைகளும், பற்றாளர்களும், சமய வழிபாட்டு முறைகளும், சம்பிரதாயங்களும் நடைமுறையிலிருந்ததாக வரலாறுகளில் உள்ளது. புத்தர் மட்டும் மேற்படி சமயங்களையும், பற்றாளர்களையும் கட்டாயப்படுத்தி, தழுவச் செய்யாமல், அவர்களின் சமய வழிபாடுகள் நம்பிக்கைகளிலிருந்த உண்மைகளை உள்ளவாறு உணர்ந்து விளங்கினார்.

ஒருமுறை வச்சா என்ற வேறு சமய முனிவர் புத்தரை அணுகி,

"புத்தரே நான் செவியுற்றேன். தங்களுக்கு மட்டும்தான் உணவுதானம் வழங்கப்பட வேண்டும். பிற சமய முனிவர்களுக்கு உணவுதானம் வழங்க வேண்டாமென்று தாங்கள் கூறியதாக என்னிடம் புகார் கூறினார்கள். தங்களின் பதில் என்ன?" என்று வினவினார்.

புத்தர் மறுதலித்து:

"வாச்சா தாங்கள் கேள்வியுற்றது தவறு. தங்களிடம் யாரோ தவறாக புகார் செய்து இருக்கிறார்கள். ஒருவருக்கு வழங்கப்படும் உணவு தானத்தை நான் உண்மையில் தடை செய்யவோ அல்லது தானமேற்பதை அவமானச் செயலாகவோ கருத மாட்டேன். அவ்வாறு கருதுபவர் மூன்று வகையான தீமைகளை செய்பவராவார். ஒன்று தானம் வழங்குபவருக்கு கிடைக்கும் நன்மைக்கு தடையானவராகிறார், இரண்டு பசியால் தானம் ஏற்கும் ஒருவருக்கு தீமை செய்பவராகிறார். மூன்றாவது மேற்படி செயலால் ஒருவர் தீமையானவராகிறார்" என்று கூறினார்.

இந்தியாவில் பேரரசர் அசோகர் மிகச் சிறந்த பவுத்த சமய மன்னராவார். அவர் காலத்தில் மனிதர்களுக்கும், மிருகங்களுக்கும் மருத்துவ மனையை கட்டினார். அவர் நாட்டு மக்களுக்கு சைவ உணவு வகையை ஆதரித்தார். சாலைகளில் தங்குமிடம் மற்றும் பொது கிணறுகளை அமைத்து நீண்ட தூர பயணிகளுக்கு பெரிதும் உதவியாயிருந்தார். சமாதானம், சகிப்புத்தன்மை, புரிதலுக்கான கொள்கைகளை பல்வேறு கற்களில் செதுக்கி விளக்கினார். தமது நாட்டு மக்களின் சமூக கல்வி மேம்பாட்டுக்கான அனைத்து திட்டங்களையும் நிறைவேற்றினார்.

புத்தரின் போதனைகளை பரப்பிட உலகமெங்கும் தமது நாட்டு சமய அறிஞர்களை பிற நாட்டுக்கு சென்று பவுத்த தம்மத்தை பரப்பியதுடன் சமய போதனைகளை கல்வெட்டு-களில் செதுக்கி தம்மத்தை பரப்பினர். அவ்வாறான கண்டெடுக்கப்பட்ட சமய நல்லிணக்க கல்வெட்டு எண்.XII கூறுகிறது:

"ஒருவர் தமது சமய போதனைகள் உயர்வானது என்றும், பிற சமய போதனைகள் தாழ்வானதென்றும் கூறி தம் சொந்த சமய புகழுக்காக முயற்சிப்பாரெனில், அவர் தாமே தமது சமயத்திற்கு புதைகுழி தோண்டியதாக கருதப்படும். மாறாக, பிற சமயங்களின் உண்மைகளை உண்மையென்று கருதுவதுடன், அவற்றின் தவறுகளை கண்டிக்காமல் இருக்கவும் வேண்டும். அதேபோல் பிற சமய போதனைகளை வாய்ப்பு கிடைக்கும் போதெல்லாம் செவியுற்று அவற்றிலுள்ள உயர்ந்த கருத்துக்களை பாராட்டுவதும், தமது சமயத்தை உயர்த்தும் செயலுமாகும்".

இந்த புத்தரின் போதனை 2550 ஆண்டுகளுக்கு முந்தையது மட்டுமின்றி கிறிஸ்து பிறப்பதற்கும் முந்தைய செய்தியாகும். எனவே, பவுத்த தம்மம் வேற்றுமையில் ஒற்றுமையை போதிக்கும் தத்துவமாகும்.

## <u>மறுபிறப்பு:</u>

அறிவியலாளர்களின் மற்றொரு வியப்புக்குரிய தத்துவம் பவுத்த சமயத்தின் மறுபிறப்பு ஆகும். உடலியல் இன்றைய அறிவியலில் வளர்ச்சியில் புத்தர் 2550 ஆண்டுகளுக்கு முன் விளக்கிய மறுபிறப்பு தத்துவம். இன்றைய தத்துவ துறை, உளவியல் துறைகளால், தியானம் மற்றும் மறுபிறப்பு ஆய்வுக்குட்பட்டு ஏற்கப்பட்டு வருகிறது.

இளம் குழந்தை தனது முற்பிறவியை குறித்து சொல்வது உலக ஆன்மீக சிந்தனையாளர்களின் வியப்புக்குரியதாக உள்ளது.

உலக பரிணாம வளர்ச்சியின் உச்சகால கட்டத்தில் சாதி, சமய ஏற்றத் தாழ்வுகள் அதிகரித்தும், சிலர் கண்களின்றி குருடர்களாய்,

காதுகளிருந்தும் செவிடர்களாய், வாயிருந்தும் ஊமைகளாகவும், ஊனமுற்றவர்களாகவும், ஏழை-களாகவும் பிறப்பதை எவ்வாறு விளக்க முடியும்?

ஏன் பிறப்புகள் தொடர்கிறது?

ஏன் சிலர் சில ஆண்டுகளில் இறக்கிறார்கள்.

சிலர் இளம் வயதில் இறக்கிறார்கள்?

ஏன் சிலர் கால்கள் ஊனமாகி பிறக்கிறார்கள்?

ஏன் சிலர் செல்வந்தர்களாகவும், சிலர் ஏழைகளாகவும் பிறக்கிறார்கள்?

ஏன் சிலர் பிறந்து, வளர்ந்து, முதிய வயதில் நிம்மதியின்றி இறக்கிறார்கள்.

ஏன் சிலர் மிகவும் நோயினால் வருந்தி இறக்கிறார்கள்.

மேற்படி கேள்விகளை எவரும் உதாசீனப்படுத்த இயலாது. அதேபோல் கடவுள் அல்லது சாத்தானின் படைப்பு என்று கூறியும், கடவுள் சோதனை செய்கிறார் என்றும் கூறி தப்பிக்க இயலாது. மொத்தத்தில் பிரபஞ்சத்தை படைத்தவர் "கடவுள்" எனும் தத்துவம் பொய்யானதாகிவிட்டது.

1960-ஆம் ஆண்டு, இங்கிலாந்து நாட்டு மத போதகர், பேராயர் "ஊலிச்" என்பவர் கடவுள் தத்துவம் குறித்து வெளியிட்ட "இடைவெளிகளின் இறைவன்" என்ற ஆய்வில் "மனிதர்களால் விளக்க முடியாத அல்லது புரிந்துக் கொள்ள முடியாத பாவும் கடவுள் தன்மையானதாக கருதப்படுகிறது. அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சியில் மிகப்பெரும் சக்தியாக கருதப்பட்ட பிரபஞ்ச கடவுள் இன்று பரிணாம வளர்ச்சியெனும் இயற்கையில் இறந்துவிடுகிறார் என்று புதிய கருத்தை வெளியிட்டார்.

உண்மையை மிகவும் நுட்பமாக ஆய்வு செய்கையில் படைப்பு கடவுள் என்பது கற்பனைக்கு எட்டாத காலம் முதலே இயற்கையின் அச்சத்தில் கடவுள் தோன்றினார். எல்லாம் வல்ல கடவுள் இருந்தால் மேற்படி மனித ஊனங்கள், அநீதி, சமத்துவமின்மை, வன்முறைகளை, இயற்கை பேரழிவுகளை அனுமதிப்பாரா?

கடவுள் கருத்து மனிதனின் அறியாமை, மூடநம்பிக்கை, அச்சம், பொருளியல் வசதிக்கான விருப்பம் ஆகியவற்றால் தோன்றியதேயாகும். எல்லா உயிர்களும் பிறக்கின்றன, வாழ்கின்றன, இறக்கின்றன. உயர்சக்தி வாய்ந்த தேவர்களென நம்பப்படும் மனிதர்களும் இறக்கிறார்கள்.

உலகில் பவுத்தம் மிகமிக எதார்த்தமான, மிகத் தெளிவானதாகும். இப்போதெல்லாம் பவுத்தம் “உங்களுக்கு நீங்களே” என்ற அடிப்படையில் சுதந்திர சிந்தனை, நேரிய காரணங்களை விளக்கி, உங்களின் மகிழ்ச்சியை நீங்களே உருவாக்கிக் கொள்ள வேண்டும் என்றே விளக்குகிறது.

மானுட உலக வரலாற்றில் முதன்முதலாக புத்தர் மக்களிடம் அறிவுறுத்தினார், “மனிதர்களே, மனித நேயத்தோடு பழகுங்கள். தீமை புரியாதீர்கள். கடவுளின் பெயரால் கடவுளை மகிழ்ச்சி படுத்துவதாக கருதி உயிர் பலியிடுதலோ, தன்னை வறுத்தும் சடங்குகளோ புரியாதீர்கள். கடவுளர்களுக்கும் பாவத்திலிருந்து விடுதலை தேவைப்படுகிறது”.

## சமயமாற்ற செயல்பாடுகள்:

புத்தர் ஒருபோதும் தமது சமய நம்பிக்கையாளர்கள் எண்ணிக்கையை உயர்த்த

முயற்சித்ததில்லை. மாறாக, தம்மத்தை உணர்ந்து விடுதலைக்கான வழி பவுத்தமே என்ற உண்மையை ஏற்று, பவுத்தர்களாவதையே புத்தர் வரவேற்றார்.

மருத்துவமனைகளில் மரணப் படுக்கையிலும் சுவையாகப் பேசி தமது சமயத்தை ஏற்பதன் மூலம் மரணத்திற்கு பின் சொர்க்கலோகம் செல்ல தமது சமய கடவுள் மன்னித்து ஏற்றுக் கொள்வார் என்று அறியாத மக்களிடம், சமய மாற்றத்தை பொய் பிரச்சாரம் செய்யும் மதவாத மிஷினரிகள் அதிகரித்து வருகிறார்கள். மக்களின் ஏழ்மை அறியாமையை பயன்படுத்தி நரக லோகத்தின் தீமைகளை விவரித்து தமது சமயத்தை ஏற்காதவர்கள் நரகத்திற்கு கடவுளால் அனுப்பப்படுவார் என்றும் அச்சுறுத்தி சமய மாற்றம் தற்காலத்திலும் செய்து வருகிறார்கள். சமய மாற்றத்திற்கு பிறகு அவர்கள் பிற சமயங்களை பொருளற்றதாகவும், பிழையான-தாகவும் கூறி வெறுப்பை வளர்க்கிறார்கள். அத்துடன் சமயம் மாறியவர்களின் இல்லத்திலுள்ள சமய நூல்களையும், சிலைகளையும் சிதைக்கச் செய்கிறார்கள்.

பவுத்தம் இம்மாதிரியான சமய மாற்றத்தை ஒருபோதும் செய்ததில்லை. 2550 ஆண்டு பவுத்த சமய வரலாற்றில் சமய புனிதபோரோ அல்லது இரத்தம் சிந்தும் மத சண்டைகளோ நிகழ்ந்த-தில்லை. சமய நம்பிக்கையாளர்களின் எண்ணிக்கை கட்டாயமாக கருதவில்லை. நன்னெறி மிக்க பவுத்த வாழ்முறை ஏற்பாளர்களையே கட்டாயமாக கருதப்பட்டது. புத்தரால் போதிக்கப்பட்ட தம்மம் அடிப்படையிலேயே மதம் என்றழைக்கப்படும் கருத்துக்களிலிருந்து எதிர்மறையானது. அதாவது வாழ்வில் எல்லா அம்சங்களிலும் ஒரு மனிதனுக்கும், மற்றொரு மனிதனுக்குமிடையில்

நிலவும் நேர்மையான உறவை விளக்குவது. உலகில் மனிதர்கள் வாழும்போது தம்மத்திற்கு இடம் தந்தாக வேண்டும். ஒரு தனி மனிதன் தனியாகவே வாழ்கிறானெனில், அவருக்கு தம்மம் தேவைப்படாது. ஆனால் உலகில் நாம் அனைவரும் ஒருவரை ஒருவர் சார்ந்தே வாழ வேண்டிய கட்டாயமாகையால், புத்தர் போதித்த "உன்னத போதனை" அனைவரின் தேவையாக உள்ளது. எனவே, உண்மையை உண்மையாக உணரும் இல்லற வாழ்வு பிறப்பு, இறப்பு மீண்டும், மீண்டும் பிறப்பு, இறப்பு எனும் சுழலும் சக்கரமாக விளங்கப்படுகிறது.

**"சூடான சூப் பருக உதவும் கரண்டியாக விளங்கக்கூடாது. ஆயினும் கரண்டியில்லாமல் சுவைக்கவும் இயலாது"** என்று.புத்தர் கூறுகிறார். மேலும், ஓராயிரம் முறை வழிபாட்டு சூத்திரங்களை பாடுவதைவிட ஒரு முழு நாள் தம்ம வாழ்க்கை வாழ்ந்து காட்டுதலே சிறந்ததாகும் என்று விளக்குகிறார்.

அங்குத்தர நிகாய எனும் நூலில் புத்தர் கூறுகிறார்: **"வெள்ளாட்டு பாலின் சுவையை அறியாத வெள்ளாட்டு இடையனாக விளங்காதீர்கள். வெள்ளாடுகளை வளர்ப்பதன் பயனை பால் மற்றும் தயிரை உண்டு மகிழும் வெள்ளாட்டுப் பண்ணையாளராக விளங்குங்கள்".**

ஒவ்வொருவரும் தன்னம்பிக்கையுடன் பவுத்த தம்மத்தை புரிந்துக் கொண்டு செயல்படுத்த போதிக்கப்பட்டுள்ளது. புத்தரின் போதனைகளை நன்குணர்ந்து விடுதலைக்கான வழியை வென்று நிப்பாணம் அடைவதே நேர்மையான பவுத்தர்-

களின் கடமையாகும். பவுத்த சமய பற்றாளர்களின் எண்ணிக்கையை உயர்த்துதல் அன்று.

## தியானம்:

பல்வேறு நவீன வகையான நோய்களுக்கு தியானமே மருந்தாகும். மேற்கத்திய நாடுகளிலும், வளரும் கிழக்கு நாடுகளிலும் காணப்படும் சிலவகை நோய்கள் மனத்தின் காரணமாக உண்டாகிறது. அவற்றை தீர்க்க வெளியிலிருந்து மருத்துவத்தை தேடுவதை விடுத்து, தனக்குள்ளாக குணப்படுத்த முடிகிறது. வேகமாக வளர்ந்துவரும் தகவல் தொழில்நுட்ப சமூகத்தில் மாற்றமே நிலையானது. புத்தர் கூறுகிறார்: "எல்லா பொருள்களும் மாறவும், தேய்ந்து விடும் தன்மையானதே". நாம் ஒவ்வொருவரும் நிதானமாக வாழ்முறைகளை திட்டமிடல் வேண்டும். தியானம் மூலம் மாற்றங்கள் எவ்வாறு ஏற்படுகிறது என்பதை புரிந்துக் கொள்ள இயலும். தொடர்ச்சியாக நமது துக்கத்தின் காரணங்களை விளங்கி, துக்க நிவாரணத்தை அடைய வழிகோலுகிறது.

பெரும்பாலான தொழில் நிறுவனங்கள் நஷ்டத்தை அடைந்து கதவடைக்கப்பட்டுவிடுகிறது. காரணம் அவர்களில் இலாப சிந்தனையே வெகு நோக்கமாகிவிடுவதே. ஆனால் தொழில் நிறுவனம் புதிது புதிதாக கண்டுபிடிப்பை ஊக்குவித்து தொழிலை விருத்தி செய்தல் மூலமே எந்த தொழில் நிறுவனமும் தொடர்ந்து சிறப்பாக செழிக்கும். புதிய கண்டுபிடிப்பும், கலைவன்மை மறுபரிசீலனையும் இல்லாத நிறுவனம் நொடித்து விடும்.

பவுத்த சமய மந்திரம், தொடர்ந்து மேலாண்மையில் கவனமுடைமை, மாற்றங்களை உணர்ந்து தேவைகளை நிறைவேற்றுதலும், மறு

கலை வன்மையும் வெற்றியின் பாதைக்கு வழிவகுக்கும்.

மனிதனே மனிதனின் விதிக்கு தலைவன்
மனிதனே அவனின் அழிவாளன்
தானே தனக்கு பாதுகாவலன்
தானே தனக்கு வெற்றியாளன்
ஒருவனை மற்றவன் காக்க இயலாது
நல்லொழுக்கமாம் நடத்தையுள்ளவன்
வெல்லற்கரியதையும் வென்று விடுவான் (தம்மபதம் 160)

"பத்தேகரத்த" சுத்தத்தில் புத்தர் கூறுகிறார்:

**"இப்போதே வாழ்ந்திடு.**
**கடந்த காலம் கடந்துவிட்டது.**
**வருங்காலம் வரவிருக்கிறது"**

இன்றைய காலகட்டத்தில் ஒருவரின் வெற்றியின் இரகசியத்தை வேறு ஒருவரும் கண்டெடுக்கலாம் அல்லது அதையே மேலும், மேலும் புதுப்பிக்கலாம். உண்மையில் ஜப்பான் நாட்டின் மின் சாதன பொருட்கள், கார்கள், துணி துவைக்கும் இயந்திரங்கள், பல நிறுவனங்களின் தயாரிப்புகள் அமெரிக்க நாட்டில் போட்டி போட்டு வெற்றிகரமாக விற்பனையாவதை நாம் அறிவோம். இந்த வெற்றிக்கு புதிய கண்டுபிடிப்புகள் முயற்சிகள் காரணமாகும். எனவே, வெற்றி என்பது ஒவ்வொரு தனி மனிதனின் தன்னம்பிக்கையிலும், தன் முயற்சியிலும் அமைந்துள்ளது. மிகவும் கடினமாக உழைக்க வேண்டிய காலம் பல ஊழியர்கள் நீண்டநேரம் பணி செய்ய தேவைப்படுகிறது. இதனால் புதிய வகையான நோய்கள் மனிதர்களுக்கு தோன்றுகிறது. இதய நோய், மனநோய் காரணமாக நோயாளிகளுக்கு புதிய வகை சிகிச்சைகள் தேவையாகிறது. மன உளைச்சல் காரணமாக இல்லற வாழ்வில் புதுபுது

துன்பங்கள் உண்டாகிறது. மேற்கத்திய நாடுகளில் மேற்கூறிய புதிய தொல்லைகளால் மக்கள் அவதியுறுகின்றனர். இப்புது நோய்களுக்கு பழமையான பவுத்த சமயங்களில் தீர்வு காணப்படும் தியானம் சிறந்ததாக கருதப்பட்டு வருகிறது.

தியானம் உளவியல் நோய்களுக்கு மிக சிறந்த முறையான நிரூபிக்கப்பட்ட சிகிச்சையாகும். எல்லா முனிவர்களும், போதகர்களும் தியானத்தை பல வகைகளில் போதித்திருக்கிறார்கள். கிறித்துவ சமய நிறுவனர் ஜீஸஸ் கிரைஸ்ட், இஸ்லாமிய இறைதூதுவராக கூறப்படும் முகம்மது அவர்களும் கூட சுமார் 40 நாட்களுக்கு அமைதியான இடத்திற்கு சென்று தவமிருந்ததாக கூறப்படுகிறது. புத்தரும், தியானம் செய்து உயர்ஞானமெய்தியதை அறிவோம். புத்தரும் தமது போதனையின் மையமாக தியானத்தை விளக்குகிறார்.

"தீமைத் தவிர்,
நன்மை புரி,
மனத்துக்கண் மாசற்றிரு"

என்பதே புத்த சமய போதனையின் அடிப்படை கோட்பாடாகும்.

ஒருவர் தியானத்தின் மூலம் தனது மனதை தூய்மையாக்கி, தம் சொந்த விடுதலைக்கான வழியை முன்னெடுக்கிறார். உலகில் வேறு எந்த சமயங்களும் பவுத்த சமயத்தைப் போன்று தியானத்திற்கு முதலிடம் வழங்கியதில்லை. இன்றும் பவுத்த சமயத்தினர் அன்றாடம் தியானப் பயிற்சி செய்கின்றனர். தியானிப்பதனால் பவுத்த சமயத்தினர் மிக மகிழ்ச்சியோடும், பிறரிடம் அன்போடும், இரக்கத்தோடும் உலகெங்கும் வாழ்ந்து வருகிறார்கள். தியானத்தின் முதல் கட்ட பயிற்சியின்போதே பலர் ஈர்க்கப்படுகிறார்கள்.

## தியானத்தின் பயன்கள்:

- மன இறுக்கத்திலிருந்து நீக்கி மன தளர்வு ஏற்படும்.
- தற்காலிக சமாதானம் ஏற்படும்.
- தன்னம்பிக்கை, மனதைரியம் ஏற்படும்.
- அச்சத்திலிருந்து விலக உதவும்.
- உள்மனதில் திருப்தி உண்டாகும்.
- வாழ வேண்டுமென்ற எண்ணத்தை உயர்த்துகிறது.
- சில செயல்பாடுகளால் ஏற்படும் மனகஷ்டங்களை நீக்கும்.
- உடல் உணர்வுகளை கட்டுப்படுத்த உதவுகிறது.
- உள்ளதை உள்ளவாறு உணர வைக்கிறது.
- நமது பலவீனங்களிலிருந்து விலக பலப்படுத்துகிறது.
- புகையிலை, மது அருந்துதல் மற்றும் போதைப் பொருட்களை மறுக்கும் எண்ணம் தியானத்தின் பயனாகும்.

எனவே, தியானம் இன்றைய நவீன மனிதர்களுக்கு அவசியப்படுவதால் உலகெங்கும் பல தியான மையங்கள் தோன்றி வருகிறது. தியானம் இன்றைய மனிதர்களுக்கு தேவையான, நிறைவான சிகிச்சையாக மெய்ப்பிக்கப்பட்டுள்ளது. சமய வேறுபாடுகளின்றி தியானத்தை மக்கள் பயிற்சி செய்து மக்கள் சமய சார்பின்றி மகிழ்ச்சியோடு தியானத்தை பயிற்சித்து வாழ்கிறார்கள்.

## பெண்கள் நிலைப்பாடு:

பெண்களுக்கு சம அந்தஸ்த்து வழங்கிய முதல் சமய போதகர் புத்தரே ஆவார். புத்தர் வாழ்ந்த காலத்தில் பெண்கள் மிகவும் கீழானவர்களாக கருதப்பட்டார்கள். அன்றைய சமயக் கோட்பாடுகள் ஆண், பெண் ஏற்றத்தாழ்வுகள் நிறைந்ததாகவே கருதப்பட்டது.

ஆண்கள் நிழலில் பெண்கள் வாழவேண்டிய கட்டாயம், வழிபாட்டு தளங்களில் நுழைதல் மறுக்கப்பட்டது. கணவர்கள் வழிபடுவதால் மட்டுமே மனைவிகள் கடவுளின் ஆசியை அடைவதாக கருதப்பட்டது. இன்றும் சில பகுதிகளில் பெண் குழந்தை பிறந்தால் அதை தீயதாக கருதப்பட்டும், ஆண் குழந்தைகள் குடும்பத்திற்கு நன்மை பயப்பவர்களாகவும் கருதப்பட்டது. புத்தர் மட்டுமே தொலைநோக்கு பார்வையுடன் பெண்கள் கீழானவர்களாக கருதப்படுவதை மாற்றி சமவாய்ப்பு வழங்கி பிக்குனிகளாக அங்கீகரித்தார்.

கோசல நாட்டு அரசி பெண் மகவை பெற்றபோது, கோசல மன்னன் மிகவும் ஏமாற்றமடைந்ததை அறிந்த புத்தர் கூறினார்:

"சில பெண்டீர் ஆண்களைவிட ஆற்றல் மிக்கவர்கள்.
உயர்வளியுங்கள் புத்தரின் ஆண்களே.
பெண்டீர் பலர் அறிவாளிகள், பண்பானவர்கள்.
கணவரின் தாயை தெய்வமாக போற்றும்
தூய்மையானவர்.
பெண்டீரே உன்னத துணைவியாகவும்,
வீரமான மகனை ஈன்றெடுப்பவராகவும்,
பெண்டீரே உலகை ஆளும் வீழ்ச்சியற்ற ஆட்சியாளர்"

தம்மபதம் கூறுகிறது:

"ஆண்கள் எல்லோரும் அறிவாளிகள் அல்லர்
அதே போன்றே பெண்களும்"

ஐரோப்பிய நாடுகளில் பதினெட்டாம் நூற்றாண்டில் பெண்கள் சம அந்தஸ்த்துள்ள-வர்களாக, வாக்களிக்கும் உரிமையும், நாகரீக வளர்ச்சிக்கு மன்னரால் உரிமை வழங்கப்பட்டது. ஏராளமான பெண்களும், பிக்குனியாக துறவராடை உடுத்தினார்கள் என்று மேற்கு நாடுகளில் பவுத்தம்

குறித்தான ஆய்வில் மேற்கூறிய உண்மைகள் தெரிய வருகிறது.

## புத்தரின் ஆளுமை:

மேற்கத்திய மக்களின் பெரும் வியப்புக்குரிய விஷயம் புத்தர் தம்மை கடவுளாகவோ, கடவுளின் மகனாகவோ அல்லது இறை தூதுவராகவோ வெளிப்படுத்திக் கொள்ளவில்லை. மாறாக, தான் ஒரு சாதாரண மனிதராக கடவுள்களுக்கும் மேலாக உயர்ஞானமுற்ற புத்தராக மட்டுமே தம்மை அறிமுகப்படுத்திக் கொண்டார்.

உயர்வெய்திய புத்தர் அழகுமிக வாய்ந்தவராக, நெடிய தோள்களும், உயரமும், வலுமிக்கவராய், பொன்னென ஒளிரும் பரந்தநல் மார்பும், எவரையும் அவர்பால் கவர்வதாய் இருந்தன.

ஒருமுறை புத்தரின் ஒளிமயமான உடலமைப்பால் கவரப்பட்ட ஒரு பிராமணர் "புத்தரே தாங்கள் எல்லாம் வல்ல கடவுளா?" என்று வினவினார். அவருக்கு புத்தர் பதிலளித்தார்.

*தெரிந்துக்கொள்ள வேண்டியன தெரியப்படுத்தப்பட வேண்டும்.*
*வளப்படுத்தப்பட வேண்டியன வளப்படுத்தப்பட வேண்டும்.*
*தேய்ந்துவிட வேண்டியன தேய்ந்துவிட வேண்டும்*
*எனவே பிராமணரே! நான் புத்தர்".*

உயர்வெய்திய புத்தர் இரக்கம், பெருங்கருணையுடையவராயிருந்தார். உலகில் ஏற்படும் அனைத்து துன்பங்களையும் தமது உயர்ஞான மனத்தில் உணர மேன்மைதங்கிய புத்தரால் முடிந்தது. அவற்றை தனது ஞான அறிவால் நேர்மை பாதை துணைக்கொண்டு துயரம் போக்கினார். குறிப்பாக கொடுங்குண கொள்ளைக்காரன் அங்குலிமாலா தனது தாயாரை கொலை செய்ய திட்டமிட்டதை தனது ஞான

அறிவால் உணர்ந்து குற்றத்தை தவிர்த்து தாயின் உயிரைக் காப்பாற்றினார். அத்துடன் கொள்ளைக்காரன் தீச்செயல் புரிவதிலிருந்து விலகி பவுத்த சமயமேற்றார்.

பதகாரா எனும் பெண்ணின் கணவர், குழந்தைகள் மற்றும் பெற்றோர்கள் ஒருவர் பின் ஒருவராக இறந்துவிட்டனர். மனம் உடைந்த பதகாரா மிகவும் துக்கத்திற்கு ஆட்பட்டதால் தரையில் உருண்டு, பிறண்டு மனநோய்க்கு உள்ளானாள். புத்தர் அவருக்கு நேரில் சென்று ஆறுதல் அளித்தார். சிறிது சிறிதாக அவரை சம வாழ்க்கைக்கு திரும்பச் செய்தார்.

சோபகா என்பவர் ஷீராவத்தியில் வசித்து வந்த சிறுவன். அவனின் தாயார் பிரசவ வேதனையில் மயங்கி விழுந்தார். அவர் இறந்துவிட்டதாக கூறி சுடுகாட்டிற்கு சுமந்து சென்று எரித்துவிட ஏற்பாடு செய்தனர். ஆயின் பெரும் சூறாவளி, புயல் காற்றும், மழை காரணமாக தாயின் பிண மேடையிலேயே விட்டுவிட்டு சென்றுவிட்டனர். சோபகாவும் மயங்கி விழுந்த தாயின் உடலைக் கட்டிப்பிடித்து ஓலமிட்டு அழுது புலம்பினாள். புத்தர் தமது நுண்ணிய ஞான உணர்வால் இதை உணர்ந்த தமது சீடர்களை அனுப்பி சோபகாவை அழைத்து வந்து உணவளித்து தேற்றினார். பிற்காலத்தில் சோபகா இளம் பிக்குவாக பயிற்சியில் சேர்ந்து பின்னாளில் தேரர் ஆனார்.

இரண்டு நாடுகளுக்கிடையே நதிநீர் பங்கீடு செய்வதில் ஏற்பட்ட முரண்பாடுகள் களைய வேண்டுமென்பதற்கு உயர்வெய்திய புத்தர் தியானம் மேற்கொண்டு சமாதான முயற்சியில் ஈடுபட்டு சமாதானத்தின் தூதுவராக விளங்கினார்.

சீகாள மிகவும் நன்கு கற்றறிந்த இளைஞர். இவரின் தந்தையார் இறந்துவிட்டதற்காக தினமும் பெரும் செலவில் பூஜை சடங்குகளை நிகழ்த்தி வந்தார். புத்தர் சீகாளருக்கு அர்த்தமற்ற பூஜை சடங்குகளை நிகழ்த்துவதால் பயன் ஏதுமில்லை என்பதை உணர்த்தி, அவரின் செயல்பாட்டை முழுவதுமாக நிறுத்தினார்.

"ஆசியஜோதி" நூலாசிரியர் எட்வின் ஆர்னால்டு கூறுவார்:

"பல்லாயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை பூக்கும் மனித மரத்தின் மலர்கொத்து பூத்தது. மெய்யறிவு வாசத்தால், நேயத்தால் தேனாய் சுவைக்கிறது. எல்லா நிகழ்வுகளிலும் புத்தரின் மனிதநேய பண்பு பெருந்தன்மையும், தீமைக்கும், நன்மைக்குமுள்ள வேறுபாடுகளை உணரும் மாண்பும், உலகோர் அனைவரையும் இன, வகுப்பு, வயது பேதமின்றி ஈர்த்து வருகிறது. புத்தரின் அன்பு, கருணை, மனிதநேயம் மற்றும் ***தீமைத்தவீர், நன்மைபுரி, மனத்துக்கண் மாசற்றிரு*** எனும் அடிப்படை போதனைகள் நாம் பிறந்த பூர்வீக சமயத்தின் உன்னதமான, உலகளாவிய தத்துவமாகும்.

## சமயத்தை அடிமைப்படுத்தாதீர்கள்:

பவுத்த வாழ்முறையை முன்னெடுக்க வேண்டியது பூர்வ பவுத்தர்களின் கடமை பவுத்த அடிப்படை போதனைகளை நடைமுறைப்படுத்தலும், பவுத்த சமய கல்வியை உயர்த்துவதுமாகும். புத்தரின் தம்மம் பிற சமயங்களை தரக்குறைவாக கூறி குற்றம் கற்பித்தல் அல்ல. மாறாக, பிற சமயங்களை நட்பாக கருதி, பெருந்தன்மை, சகிப்புத்தன்மையுடன் வாழ பழகுதலே பவுத்த தம்மம் ஆகும்.

பவுத்த சமய சான்றோர்கள் தங்களின் சமய நல்லெண்ணக் கோட்பாட்டை உயர்த்திட பல் சமய இயக்கங்களை நிறுவி வருகிறார்கள். மாறாக சில பொறாமை சமயவாதிகள் பொய்யான வாக்குறுதிகளை வழங்கி தமது சமயத்திற்கு மாற்றி வருகிறார்கள். பிற சமயங்கள் மிக கீழானதாக விளக்கியும், மிகவும் முதியவர்கள் வசிக்கும் இல்லங்களிலும் சென்று சமய மாற்றப் பணிகளை தீவிரமாக செய்கின்றனர். ஒருமுறை வைசாக பவுர்ணமி விழாவின்போது புத்தரை குறித்து தவறான செய்திகள் அடங்கிய அச்சுப் பிரதிகளை சிலர் விநியோகித்தனர். வைகாச பவுர்ணமி விழாவில் கூடியிருந்தோர் தங்களின் சகிப்புத் தன்மையால் ஒரு மிகப் பெரிய கலவரம் நிகழ்வது தவிர்க்கப்பட்டது.

எல்லா சமயத்தினர் தங்களின் விருப்பத்திற்கு எந்த சமயத்தையும் தழுவவும், பரப்பவும் உரிமை உடைவர்கள் ஆயினும் வற்புறுத்தல், கட்டாயப்படுத்துதல் அல்லது பணம், பொருள்களை கொடுத்தும் சமய மாற்றம் செய்வது சட்டத்திற்கும், நேர்மைக்கும் முரண்பாடானது.

பவுத்த சமய உபாசகர்களே 2550 ஆண்டுகளுக்கு முந்தைய பழம்பெரும் இந்திய சமயம் பவுத்தம். இந்தியர் அனைவருக்கும் பெருமையை வழங்கும் சமயம் ஆகும். அன்பு, கருணை, இரக்கம், சகிப்புத்தன்மை, உலகின் உயர் கல்வியாளர்களின், அறிஞர்களின் சமயமாகி வரும் சமயம், நாம் பிறந்த பூர்வீக பவுத்த சமயம் ஆகும். ஒருவர் செய்யும் பூஜை, சடங்குகள், பிரார்த்தனைகளால் மட்டுமே ஒரு சமயம் மேலான சமயமாகாது. அதேபோல் சமய நூல்களில் கூறப்பட்டவை என்பதற்காகவோ, மரபு ரீதியானது அல்லது முன்னோர்கள் ஏற்றுக் கொண்டதால் மட்டுமே ஒரு சமயம் உயர்வானதாகாது.

பெரும்பாலாலோர் கருத்து என்பதற்காகவோ ஒரு சமயம் உயர்வானதாகாது. பவுத்த சமய கோட்பாடுகளை ஏற்க விரும்பும் எவரும் சமய கோட்பாடுகளை விமர்சன ரீதியில் ஆராயப்பட்டும், சரியாக பரிசீலிக்கப்பட்டும் ஏற்கப்பட வேண்டும். அறிவுடையோர் தங்கத்தை சுட்டும், வெட்டியும், உரைத்தும் பரிசோதித்து பார்த்து ஏற்பதுபோல புத்தரின் போதனைகளை ஆராய்ந்த பின்னரே ஏற்க வேண்டும் என்று மெய்ஞானமுற்ற புத்தரே கூறுகிறார்.

எனவே, புத்தரின் போதனை திறந்த தத்துவாய் உள்ளது. அது எவராலும் கேள்வி கேட்டறியத்தக்கதாய் உள்ளது. எண்ணிலா வினாக்களுக்கு தம்மத்தில் விடையளிக்கப்பட்டுள்ளது. புத்தரின் போதனைகளை தெளிவாகப் புரிந்துக் கொள்வதற்காக மாஸ்லோவின் தத்துவ விளக்கமும், கிழக்கு மற்றும் மேற்கு நாடுகளின் சமய மாற்ற நிகழ்வுகளின் அனுபவ உதாரணங்களுடன் இச்சிறுநூல் வெளியிடப் படுகிறது. பவுத்தத்தை விமர்சிப்பவர்கள் அதன் போதனைகளை சரியாகப் புரிந்துக் கொள்ளாமையாலும், முறையான பயிற்சி இல்லாமையாலும், தவறான கருத்துக்கள் தோன்றக்கூடும். எவரெல்லாம் தம்ம போதனை-களை நன்கு கற்று ஆராய்கிறார்களோ அவர்கள் தம்மம் நன்கு, வெளிப்படையாய், திறந்த தத்துவமாய் பிரகடனப்படுத்தப்பட்டுள்ளதை காண்பர்.

*நேர்வழி நன்கு காட்டப்பட்டுள்ளது*
*நேராய் முன்னே நடவுங்கள் திரும்பாமல்*
*விரையுங்கள் நீங்கள் மேலும்மேலும்*
*விரைந்து அடைவர் நிப்பாணம் தன்னையே*

புத்தரின் போதனைகளிலிருந்து ஒவ்வொருவரும் சிலவற்றை சேகரிக்க முடியும். "அகாலிகா" அல்லது காலம் கடந்தவை எனப் போற்றப்படுவது.

எப்போதும் மாறாதது, தொடர்ச்சியாய் புதுமையாய் தோன்றுவது, காலம் கடந்தவை மட்டுமல்ல, உன்னதமானது, உலகளாவியது.

நாம் பிறந்த பூர்வீக சமயம் "சாக்கரைன்" எனப்படும் பொய்யான இனிப்புப் பொருள் அல்ல. மெய்யான தம்மத்தில் மாபெரும் கடல் முழுவதும் ஒரே சுவையே - உப்பு சுவை, அதேபோல தம்மம் முழுவதும் ஒரே சுவை - சுதந்திர சுவை.

*அறியாமையிலிருந்து விடுதலை அச்சத்திலிருந்தும்,*
*மூட நம்பிக்கையிலிருந்தும் விடுதலை*
*விரதங்கள், பிரார்த்தனைகளிலிருந்தும் விடுதலை*
*சிந்திக்கும் சுதந்திரம்*
*வினா எழுப்ப சுதந்திரம்*
*துன்பம் துயரங்களிலிருந்தும் விடுதலை*

துன்பத்தை வெல்வது எப்படி என்றும், நிறைவான இன்பத்தை அடைவது எப்படி என்றும் விளக்கப் பட்டுள்ளது. ஆம்! ஒருவன் தன் முயற்சியாலேயே அடைய முடியும். தேவை மனத்தை தூய்மைப்-படுத்துதல். தூய மனத்திலுள்ளது பேரின்பம்.

**"துன்பமேதும் உமக்கு தோன்றாதிருப்பதாக**
**பிணியேதும் உம்மை பீடிக்காதிருப்பதாக**
**அபாயமேதும் உம்மை அணுகாதிருப்பதாக**
**அமைதியில் நீடூழி வாழ்வீர்களாக"**

**எல்லா உயிர்களும் இன்புற்றிருக்கட்டும்.**

புத்தர் ஒளி பன்னாட்டுப் பேரவை - சென்னைக்கிளை
பிற வெளியீடுகள்

- Daily Buddhist devotion - பவுத்த வழிபாடுகள் (வீ. சித்தார்த்தா பெரியார்தாசன்).
- The Future of Buddhist Youths (Master Hsing Yun) - பவுத்த இளைஞர்களின் எதிர்காலம் (அன்புமலர்).
- The Great Buddha (Master Hsing Yun) - உயர்வுறு புத்தர் (அன்புமலர்).
- புத்தம் சரணம் கச்சாமி (அன்புமலர்).
- உலகில் சமாதானம் நிலவட்டும் (அன்புமலர்).
- Let Peace Prevail on Earth (Ven.K. Sri Dhammanda).
- How to over come difficulties (Ven.K. Sri Dhammanda).
- சங்கடங்களை சமாளிப்பது எப்படி? (அன்புமலர்).
- Buddhist attitude towards other religion (Ven.K. Sri Dhammanda) -
  பிற சமயங்களிடையே பவுத்தர்களின் நிலைப்பாடு (அன்புமலர்).
- Why Buddhism (Ven.K. Sri Dhammanda) - பவுத்தம் ஏன்? (அன்புமலர்)
- Buddhism for Primary / Buddhist Child (Ven.K. Sri Dhammanda) -
  பவுத்த குழந்தைகள் (அன்புமலர்).
- Daily Buddhist Devotion (Ven. K. Sri Dhammanda) - பவுத்த வழிபாடு (வி. சித்தார்த்தா பெரியார்தாசன்).
- Humanistic Buddhism - a Blue Print for Life (Ven. Master Hsing Yun).

# SERVICES AVAILABLE AT BUDDHIST MAHA VIHARA

- Dana for Monks (at Vihara or Home) and Bana (Sermons)
- Blessing Services / Funeral Services by Monks
- Booking of Facilities for religious functions / events
- Marriage Registration
- Full Moon / New Moon Day Puja & Free Vegetarian Lunch
- Sunday Dhamma Classes for Children & Adults
- Buddhist & Pali University Diploma Courses
- K Sri Dhammananda Library
- Bookshop
- Kindergarten - Tadika Sudharma
- PARAMA Business & I.T. Training Centre

**WEEKLY ACTIVITIES**

| | | |
|---|---|---|
| • Daily Puja | | 6.30a.m. & 7.30p.m. |
| • Choir Practice | Tuesday | 8.00p.m. |
| • Special Talk | Friday | 1.00p.m. |
| • Dhamma Talk | Friday | 8.00p.m. |
| • Meditation | Mon, Tues & Thurs | 8.00p.m. |
| • Bojjhanga Puja | Saturday | 7.30p.m. - 8.30p.m. |
| • Puja & Talk | Sunday | 8.30a.m. |
| • Dhamma School | Sunday | 8.30a.m. & 11.00a.m. |
| • Dharma for the Deaf (fortnightly) | Sunday | 2.00p.m. |

**DONATION IN CASH OR KIND CAN BE MADE FOR:**

- Propagation of Buddhism (Dhammaduta)
- Free Publications (Malaysia and Overseas) - Annually about 300,000 books in 19 Languages
- Education Fund
- Full Moon and New Moon services sponsorship
- General Maintenance of the Buddhist Maha Vihara
- Utilities (Electricity, water, telephone, administration etc)
- Illumination (lighting) of the Main Shrine Hall
- Illumination (lighting) of the Awkana Buddha & Cakra
- Monks' Dana
- Monks' Requisites
- Welfare Fund (Malaysia and Overseas)
- Special Religious Events
  - Wesak
  - Annual Blessing Service
  - Annual Merit Offering
  - Kathina Pinkama (ceremony)
  - Monks’ Novitiate Programme

**MAY THE BLESSINGS OF THE NOBLE TRIPLE GEM BE WITH YOU AND YOUR FAMILY**

# DONATION FORM

**Buddhist Maha Vihara**
123, Jalan Berhala, Brickfields,
50470 Kuala Lumpur, Wilayah Persekutuan, Malaysia.
Tel: 603-22741141 Fax: 603-22732570

I / We would like to make a donation to the Buddhist Maha Vihara.

Name : ..........................................................................................................

Address : ..........................................................................................................

..........................................................................................................

..........................................................................................................

Amount : RM ..........................................................................................................

Towards : Free Publications
(English, Mandarin, Malay, Tamil, Sinhalese, Spanish, Thai, Vietnamese, Burmese, Hindi, Kannada, Telegu, Oriya, Kishwahili, Chichewa, Luganda, Brazilian Portugese, Dutch, French)

☐ Others, please specify ......................................................

..........................................................................................................

All cheques can made payable to: BUDDHIST MAHA VIHARA or TT to "BUDDHIST MAHA VIHARA" ACCOUNT NO. 0061-10-003018-0, EON BANK BERHAD, BRICKFIELDS, KL. Kindly send us a copy of your BANK SLIP so that we can send you an OFFICIAL RECEIPT.

Donations can also be made by VISA and Master Card at the Buddhist Maha Vihara Office.



BLIA சென்னைக்கிளை
2006-2007 பயிற்சி முகாம்
Novice Camp






**Sasana Abhiwurdhi Wardhana Society**
佛陀教义弘扬协会

Buddhist Maha Vihara,
123, Jalan Berhala, Brickfields,
50470 Kuala Lumpur, Malaysia
Tel: 603-22741141 Fax: 603-22732570
E-Mail: info@buddhistmahavihara.com
Website: www.buddhistmahavihara.com
www.ksridhammananda.com

ISBN 978-983-3896-07-3

